# மேற்றிராணியரல்லாத வேதசாட்சிகள் பலர் பெயரால் - பொது

## Salus autem

**பிரவேசம்: சங். 36: 39**

நீதிமான்களுடைய இரட்சணியமோ ஆண்டவரிடமிருந்து வருகிறது. அவர் துன்ப காலத்தில் அவர்களை ஆதரிப்பவராயிருக்கிறார். (சங். 1) பொல்லாதவர்களை குறித்து எரிச்சற்படாதே, அக்கிரமஞ் செய்கிறவர்கள் பேரில் பொறாமை கொள்ளாதே. – பிதாவுக்கும். . .

**சபைச் செபம்**

செபிப்போமாக: ஆண்டவரே, தேரீருடைய பரிசுத்த வேதசாட்சிகளான (இன்னார் இன்னாருடைய..) வருடாந்திர திருநாளினால் எங்களை மகிழச் செய்கிறீரே: அவர்களுடைய பேறுபலன்களைக் குறித்து மகிழ்கின்ற நாங்கள் அவர் களுடைய முன்மாதிரிகைகளினால் பற்றியெரியவும் தயவாய்க் கிருபை செய்தருளும். - தேவரீரோடு இஸ்பிரித்துசாந்துவின் ஐக்கியத்தில் . . .

**நிருபம்**

**அப்போஸ்தலரான முத். சின்னப்பர் எபிரேயருக்கு எழதிய நிருபத்திலிருந்து வாசகம்** (எபி. 10. 32-38)

சகோதரரே,. நீங்கள் உங்கள் முந்தின நாட்களை நினைத்துக்கொள்ளுங்கள். அப்போது நீங்கள் தெளிவடைந்து உபத்திரவங்களின் பெரும் போராட்டத்தைச் சகித்தீர்களே. ஒரு பக்கத்தில் நிந்தைகளிலும் உபத்திரவங்களிலும் பார்க்கி றவர்களுக்கு வேடிக்கையானீர்கள். மற்றொரு பக்கத்தில் அப்படிப் பாடுபட்டவர் களுக்கு நீங்களும் கூட்டாளிகளானீர்கள். எப்படியெனில் விலங்கிடப்பட்டவர் களுக்கு நீங்கள் மனதிரங்கினதுமன்றி, அதிக உத்தமும் நிலைபெற்றதுமான ஐசுவரியம் உங்களுக்கு உண்டென்று அறிந்து சந்தோஷமாய் உங்கள் ஆஸ்திகளையும் கொள்ளையடிக்கவிட்டீர்கள். ஆதலால் மிகுந்த சம்பா வனைக்கு ஏதுவான உங்கள் நம்பிக்கையை இழந்து போகாதேயுங்கள். நீங்கள் தேவசித்தத்தை நிறைவேற்றி, வாக்குத்தத்தத்தைக் கைக்கொள்ளும்டியாகப் பொறுமை உங்களுக்கு அவசரமாயிருக்கின்றது. இன்னும் இருப்பது சொற்பக்காலம். வரவேண்டியவர் வருவார். தாமதம்பண்ணார். என் நீதிமான் விசுவாசத்தினாலே பிழைப்பான்.

**படிக்கீதம்**: (சங். 91. 13-14)

நீதிமான்கள் அபயமிட்டார்கள். ஆண்டவர் அவர்களுக்கு செவிசாய்த்து, அவர்களுக்கு நேரிட்ட எல்லாத் துன்பங்களினின்று மீட்டருளினார். - இருதயத்தில் வேதனைப் படுகிறவர்களுக்குத் துணையாக ஆண்டவர் இருக்கிறார். மனத்தாழ்ச்சியுள்ளவர்களை இரட்சிப்பார்.

**அல்லேலுய்யா கீதம்**

அல்லேலுய்யா, அல்லேலுய்யா ஆண்டவரே, வெண்தூய்மையணிந்த வேதசாட்சிகளின் சேனை உம்மை புகழ்கின்றது. அல்லேலுய்யா

*சப்தரிகை ஞாயிறுக்குப்பின் அல்லேலுய்யா கீதத்தை விட்டுவிட்டு கீழேயுள்ளதைச் சொல்ல வேண்டும்*

**நெடுங்கீதம்:** (சங். 125. 5-6)

கண்ணீருடன் விதைக்கிறவன் சந்தோஷத்துடன் அறுப்பார்கள். அவர்கள் விதைகளை தெளிக்கையில் அழுதுகொண்டு போனார்கள். ஆனால், தாங்கள் அறுத்த அரிக்கட்டுகளை சுமந்துகொண்டு வருகையில் பெருமகிழ்ச்சியோடு வருவார்கள்.

**சுவிஷேசம்** (லூக். 12: 1-8)

அக்காலத்தில் சேசுநாதர் தமது சீஷர்களை நோக்கி வசனிக்கத் தொடங்கினதாவது: பரிசேயருடைய கள்ள ஞானமாகிய புளிக்காரத்தின் மட்டில் நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள். ஆயினும், வெளியாக்கப்படாத மறைபொருளு மில்லை அறியப்படாத இரகசியமுமில்லை. ஏனென்றால் நீங்கள் இருளிலே சொன்னவைகள் வெளிச்சத்திலே சொல்லப்படும் நீங்கள் அறைகளிலே காதுக்குள் பேசினது வீடுகளின் மேலே பிரசங்கிக்கப்படும். என் சிநேகிதராகிய உங்களுக்கு நான் சொல்லுகிறேன்: சரீரத்தைக் கொலைசெய்து, அதற்குமேல் ஒன்றுஞ் செய்யத் திராணியற்றவர்களுக்கு நீங்கள் அஞ்சவேண்டாம். ஆனால் நீங்கள் யாருக்கு அஞ்ச வேண்டுமென்று உங்களுக்குக் காண்பிப்பேன் உயிரைப் பறித்த பின்பு நரகத்தில் தள்ள வல்லமையுள்ளவருக்கே அஞ்சுங்கள். ஆம், அவருக்கே அஞ்சுங்களென்று உங்களுக்குச் சொல்லு கிறேன். இரண்டு காசுக்கு ஐந்து அடைக்கலங் குருவிகள் விற்கிறதல்லவோ? ஆயினும் அவைகளில் ஒன்றானாலும் சர்வேசுரனுடைய சமுகத்தில் மறக்கப் படுவதில்லை. உங்கள் தலை உரோமங்களெல்லாம் எண்ணப்பட்டிருக்கின்றன் ஆகையால் நீங்கள் அஞ்சவேண்டாம் அநேகம் அடைக்கலங் குருவிகளைவிட நீங்கள் அதிக விலையுள்ளவர்களாயிருக்கிறீர்கள். மீளவும் நான் உங்களுக்குச்

சொல்லுகிறதாவது: மனிதர் முன்பாக என்னை அறிக்கை பண்ணுகிறவன் எவனோ, அவனை மனுமகனும் சர்வேசுரனுடைய தூதர் முன்பாக அறிக்கை பண்ணுவார்.

**ஒப்புக்கொடுத்தல்** (ஞான. 3. 1-3)

நீதிமான்களுடைய ஆத்துமங்கள் சர்வேசுரனுடைய கரத்திலிருக்கின்றன. சாவின் பயம் அவர்களை அணுகாது. மதியீனருடைய கண்களுக்கு முன் அவர்கள் மரித்தவர்களாக தோன்றினார்கள். ஆனால் அவர்கள் சமாதானத்தில் இளைப்பாறுகிறார்கள். (பா. கா. அல்லேலுய்யா)

**அமைதி மன்றாட்டு**

ஆண்டவரே, தேவரீருக்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட காணிக்கைகளின்மேல் களிகூர்ந்து நோக்கியருளும். தேவரீருடைய பரிசுத்த வேதசாட்சிகளான (இன்னார் . . இன்னாருடைய . .) வேண்டுதலினால் எல்லா ஆபத்துக்களி னின்றும் எங்களைத் தற்காத்தருளும்படி தேவரீரை மன்றாடுகிறோம். – தேவரீரோடு ….

**உட்கொள்ளுதல்** (மத். 10. 27)

நான் உங்களுக்கு இருளில் சொல்லுகிறதை வெளிச்சத்தில் சொல்லுங்கள். நீங்கள் காதிலே இரகசியமாய்க் கேட்கிறதையும் வீட்டு கூரையிலிருந்து பிரசங்கியுங்கள். (பா. கா. அல்லேலுய்யா)

**உட்கொண்ட பின்**

செபிப்போமாக: ஆண்டவரே இந்த சற்பிரசாத உட்கொள்ளுதல் எங்களை பாவத்திலிருந்து பரிசுத்தமாக்கி தேவரீருடைய வேதசாட்சிகளான (இன்னார் இன்னாருடைய ..) வேண்டுதலினால் எங்களைப் பரலோக மருந்தில் பங்கு பற்றுவோராகவும் செய்யக்கடவது. — தேவரீரோடு …